" கிர்ஸாதந: க்வ நிவஸந் கிமுபாததாந:
கஸ்மை பலாய ஸ்ருஜதீச இதம் ஸமஸ்தம்,
இத்யாத்யநிஷ்ட்டி தகுதர்க்கமதர்க்கயந்த:
த்வத்வைபவம் ச்ருதிவிதோ விதுரப்ரதர்க்யம் "

இந்த ச்லோகத்தின் கருத்தாவது:- எம்பெருமானே ஸர்வஸ்ரஷ்டா என்னுமிடத்தில் பிறர் சில குசோத்யங்களைக் கூறுகின்றார்களாம்; உலகத்தில் ஸ்ருஷ்டி செய்பவர்கள் யாவரும் சில ஸஹகாரி காரணங்களோடு கூடியே படைக்கக்காணு நின்றோம். ஸர்வஸ்ரஷ்டாவான பரமபுருஷனுக்கும் ஸஹகாரி காரணங்கள் இன்னவை யென்று காட்டவேணும். அப்படி காட்டாதொழியில் அவன் ஸ்ருஷ்டி கர்த்தாவென்பது அஸம்பாவிதமாகும். இதற்காகச் சில ஸஹகாரிகளை நிரூபிப்பதானல், ஸஹகாரிகளான அப்பொருள்களைப் படைத்தது யார்? என்று கேள்வி வரும். ஈச்வரனே படைத்ததாகச் சொல்லுவீர்கள். அவற்றைப் படைக்கும்போது எவை ஸஹகாரிகளாயிருந்தனவென்று கேள்வி வந்தே தீரும். இப்படியே ப்ரச்ந பரம்பரை போய்க்கொண்டேயிருக்கும். கடைசியாக ஸர்வேச்வரனல் ஸ்ருஷ்டிக்கப்படாத சில பொருள்களுண்டென்று இசையவேண்டி வரும். ஆகவே பகவான் ஸர்வஸ்ரஷ்டா அல்லன் என்றதாகும். இப்படியே மற்றொரு கேள்வியுமுண்டாகிறது: ஸ்ருஷ்டிக்கும்போது பகவான் எந்த இடத்திலிருந்துகொண்டு ஸ்ருஷ்டிக்கிறன். ஒரு அதிகரணமின்றி ஸ்ருஷ்டிக்க முடியாதன்றோ. அதிகரணமாக ஒரு தேசத்தைக் காட்டினல் அதைப் படைக்கும்போது எந்த இடம் அதிகரணமாயிருந்ததென்று கேள்வி வரும். இப்படியே இவ்விஷயத்திலும் ப்ரச்ந பரம்பரைகள் சென்றுகொண்டேபோம். கடைசியாக, பகவானல் ஸ்ருஷ்டிக்கப்படாத ஒரு இடம் ஸித்தித்தே தீரும். இதனலும் பகவான் ஸர்வஸ்ரஷ்டாவல்லன் என்றதாகும். இங்ஙனே மற்றொரு கேள்வியுமுண்டாகிறது. பிரபஞ்சத்தைப் படைக்கின்ற பரமாத்மாவுக்கு எது உபாதாந காரணமாகின்றதென்று கேட்கிறோம். கீழ் ஸஹகாரிகாரண விஷயத்திற் போலவே இதுதன்னிலும் ப்ரச்ந பரம்பரையும் ஆபத்தியும் துல்யம். இனி பகவான் என்ன பலனைக் கருதிப் படைக்கிறனென்கிற கேள்வியுமுண்டாகிறது. * ப்ரயோஜநமநுத்திச்ய ந மந்தோபி ப்ரவர்த்ததே * என்பராதலால் ஸ்ருஷ்டிக்கு ஒரு ப்ரயோஜனம் சொல்லியேயாகவேணும். அந்த ப்ரயோஜனமானது ஸ்ருஷ்டிக்கு முன்னே ஸித்தித்திருக்கவில்லை யென்று கொள்ள வேண்டியதாகும். ஆகவே பகவான் அவாப்த ஸமஸ்தகாமன் என்கிற ஸித்தாந்தம் குலைந்ததாகும் —என்றிப்படியாகப் பிறர் செய்யும் குசோத்யங்கள் மேற்குறித்த ச்லோகத்தின் பூர்வார்த்தத்தால் அநுவதிக்கப்பட்டு, மேல் உத்தரார்த்தத்தில் ஒரே வார்த்தையால் ஸமாதானம் சொல்லப்பட்டுள்ளது. " த்வத்வைபவம் ச்ருதிவிதேர் விதுரப்ரதர்க்யம் " என்கிறவிதுவே ஸமாதானமாய்த்து. விசித்திர விலக்ஷண சக்திசாலியான பகவான் திறத்தில் ப்ரபல ப்ரமாண ஸித்தமான அர்த்தங்களில் குசோத்யம் செய்வது தகாது என்கிறவிதுவே ஸமாதானமாக முடிந்து நின்றது.

தேசிகனும் அச்யுத சதகத்தில் இப்படியே கூறுகின்றார்; * புரிஸபஹாண ஸரீரோ புவணாணம் ஹோஸி அச்சுஅ உவாஆணம்; ணிஅஸங்கப்பஸணாஹோ வஹஸி ணிமித்தத்தணம் வி அப்புஅ ஸத்தீ* (சர்யா—புருஷப்ரதாநசரீரோ புவநாநாம் பவஸ்யச்யுதோபாதாநம்; நிஜஸங்கல்பஸநாதோ வஹஸி நிமித்தத்வமப்யத்புதசக்தி:* என்கிறார். இதில் முடிவில் **அத்புதசக்தி:** என்றதே ஸாரம். பிறர் செய்யும் குசோத்யங்களை பகவானுடைய அத்புதசக்தியோகத்தை நிரூபித்தே நிரஸிக்க

வேணு மத்தனையென்று காட்டினாராயிற்று. இப்படி யெல்லாம் அருளிச்செய்கிற ஆசார்யர்களுக்கு *ச்ருதேஸ்து சப்தமூலத்வாத்* என்கிற ப்ரஹ்மஸூத்ரமே வழி காட்டியாக நிற்கிறது. பிறர் இந்த ஸூத்ரத்தை மேலெழுந்தவாரியாக நிர்வஹித்துவிட்டு, எம்பெருமானுடைய விசித்ரசக்தியை அபதார்த்தமாக எண்ணித் தள்ளிவிட்டுக் குத்ருஷ்டிகளைப் போலவே பூர்வபக்ஷங்களைச் செய்து போருகிறார்கள்.

* அந்தர் பஹிச்ச தத்ஸர்வம் வ்யாப்ய நாராயண: ஸ்த்தித: * என்று ச்ருதி ஸ்பஷ்டமாகச் சொல்லியிருக்கச் செய்தேயும், அணுவான வஸ்துக்களிலே பகவான் எப்படி உள்ளே வியாபிக்கமுடியும்? என்கிற ஆக்ஷேபத்தைப் பிறர் வலிதாகச் செய்கிறார்கள். ஜீவாத்மாவோ அணுபூதன். நிரவயவமான அணுவஸ்துக்களுக்கு உட்புறம் கிடையாதாகையாலே உள்ளே வியாபிப்பதென்பது அணுவஸ்துக்களில் அஸம்பாவிதமன்றோ. ஆகவே *அந்தர்பஹிச்ச தத்ஸாவம்* என்றவிடத்து தச்சப்தார்த்தத்தில் ஜீவாத்மாவை விலக்கியேயாகவேணும்; அயோக்யார்த்தத்தை ச்ருதி ப்ரதிபாதியாதன்றோ ? என்று அவர்கள் வாதிக்கிறார்கள்.

ஸித்தாந்திகளின் ஸமாதானம் யாதெனில் ; ஸாவயவமான வஸ்துக்களுக்குத்தான் உட்புறமிருக்குமென்றும், நிரவயவமானவற்றுக்கு உட்புற மிராதென்றும் ஒரு பிரமாணமும் கூறுகின்றதில்லை. நிரவயவமான ப்ரதாநம் முதலியவற்றில் அந்தர்தேசம் அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றதே. ப்ரதாநம் நிரவயவ மென்கிற பக்ஷத்தை தேசிகனும் தத்வமுக்தாகலாபத்தில் *அவ்யக்தம் த்வநமதேபி ஹ்யநவயவம் * என்கிற ஸ்ரீஸூக்தியால் தெரிவித்துள்ளார்.

நிரவயவமான வஸ்துக்களுக்கு அந்தர்தேச மில்லையென்று சொல்வதைவிட்டு அணுத்ரவ்யங்களுக்கு அந்தர்தேசம் கிடையாதென்று சொல்லுகிறோமென்றும், சேதநன் அணுத்ரவ்யமாகையாலே அவனுக்கு அந்தர்தேசமில்லையென்பது பொருந்துமென்றும் பிறர் வாதிப்பதுதானும் அயுக்தம். *ய ஆத்மநி திஷ்டந் ஆத்மநோந்தர:, *அணோரணீயாந்* இத்யாதி ச்ருதிகளாலும் * அணோரணீயாம்ஸம் * என்கிற கீதா வசனத்தாலும் சேதநனிடத்திலும் பகவானுக்கு அந்தர்வ்யாப்தி யுண்டென்று ஸ்பஷ்டமாக விளங்குகையாலே.

ஜிஜ்ஞாஸாதிகரண ச்ருதப்ரகாசிகையில் * ய ஆத்மநி திஷ்டந்நித்யுக்தே, *வேத்யாமக்நிஸ் திஷ்டதி, திலே தைலம் திஷ்டதீதிவத் பஹிரபஹிஸ்ஸ்திதிஸாதாரண்யாத் தத்வைசத்யார்த்தமாஹ — ஆத்மநோந்தர இதி* என்றுள்ளது. இது ஆத்மாவினிடத்தில் அந்தர்வ்யாப்தி யுண்மையை நன்கு புலப்படுத்தா நின்றது. ஆத்மாவுக்கு அந்தர் தேசமுண்டென்று கொள்ளவேணு மென்பதை ஸ்ரீபாஷ்யகார ஸ்ரீஸூக்தியும் விசதீகரிக்கின்றது ; மேலேகாட்டிய கீதாவசனத்தில் '' கவிம் புராண மநுசாஸிதாரம் அணோரணீயாம்ஸ மநுஸ்மரேத் ய:'' என்பதில் **அணோரணீயாம்ஸம்** என்பதற்குப் பொருளருளிச்செய்யா நின்ற பாஷ்யகாரர் ''ஜீவாதபி ஸூக்ஷ்மதரம்'' என்றுரைத்தருளினர். ஆத்மாவில் அந்தர்தேசம் உள்ளதாக இசையாவிடில் 'ஜீவாதபி ஸூக்ஷ்மதரத்வம்' எம்பெருமானுக்கு நிர்வஹிக்க இயலாதன்றோ. *ஜீவாதபி ஸூக்ஷ்மதரம்* என்றது ஜீவனிற் காட்டிலும் அபக்ருஷ்ட பரிமாணமுடையவன் என்றபடியன்று: அப்படியாகில் பகவானுக்கு விபுத்வஞ்சொல்லுகின்ற ச்ருதிஸ்ம்ருதிகள் சீறுமே. ஆகவே ஆத்மாவினுடைய அல்ப தேசத்திலும் வியாபித்திருக்கின்றானென்பதே இங்குப் பொருளாகும்.

* மயி ஸர்வமிதம் ப்ரோதம் ஸூத்ரே மணிகணா இவ* என்பதனாலும் அணுவில் அந்தர் தேசம் ஸித்திக்கும். நூலில் ரத்னத்திரள் போல் ப்ரஹ்மத்தனி

டத்தில் சேதநாசேதநாத்மகமான ப்ரபஞ்சம் கோக்கப்பட்டிருப்பதாகச் சொல்லுகிறது இந்த ப்ரமாணம். ஆத்மாவில் அந்தர்தேசமில்லையாகில் இது பொருந்தாது. அதில் பரப்ரஹ்மத்திற்கு ஸூத்ரஸ்தாநீயத்வம் சொல்லியிருப்பது உணரத்தக்கது. சிறந்த விவேகிகளுக்கே இது ஸாத்யமாகும்.

ஸஹஸ்ரநாமத்தில் * அணுர் ப்ருஹத் க்ருசஸ் ஸ்தூல: * என்றவிடத்தில் அணுபதத்திற்கு பாஷ்யமருளிச் செய்யா நின்ற பட்டர் (பகவத்குண தர்ப்பணத்தில்) * அதிஸூக்ஷ்மதஹராகாசாவ்யக்த ஜீவாநுப்ரவேச ஸாமர்த்யாத் அணு: * என்றருளிச் செய்தார். இப்படிப்பட்ட ப்ரமாண கணங்களால் எம்பெருமானுக்கு அணுபதார்த்தங்களிலும் அந்தர்வ்யாப்தி அநபாயமென்பதும், ஒவ்வொரு பதார்த்தத்திலும் பரிஸமாப்ய வர்த்தமாநத்வமும் அவ்யாஹதமென்பதும் ஸித்தாந்திகளின் கொள்கையாக ஸித்தம். ப்ரஹ்மவ்யாப்திபரிஷ்க்ரியா என்கிற வடமொழி நூலிலே இதனை ச்லோகரூபமாகவும் வசனரூபமாகவும் விரியவுரைத்தோம்.

## கீழ்விவரித்த வ்யாப்திவிஷயத்திலே ஸாரார்த்த ஸங்க்ரஹம்.

பரம புருஷனொருவனுளனென்பதையும் அவனுடைய ஸ்வரூபரூப குணாதிகள் இப்படிப்பட்டவையென்பதையும் நாம் சாஸ்த்ரங்களைக்கொண்டு அறிகிறோமேயல்லது வேறு எதனாலும் அறிகின்றிலோம். அதீந்த்ரியமான விஷயங்களில் நமக்கு சாஸ்த்ரமே கைவிளக்கு. அல்பஜ்ஞர்களான நாம் சாஸ்த்ரங்களில் நேராக இறங்கித் தத்துவங்களையும் மருமங்களையும் உணர உரிமையுடையோமல்லோம்; *** சாஸ்த்ரஜ்ஞாநம் பஹுக்லேசம் புத்தேச் சலந காரணம். உபதேசாத் ஹரிம் புத்த்வா *** என்று சாஸ்த்ரமே காட்டின கட்டளையிலே, தத்வதர்சிகளான மஹாப்ராஜ்ஞர்கள். வெண்ணெயைக் கடைந்து திரட்டியெடுத்துக் கொடுக்குமாபோலே மிகலலிதமாக எடுத்துரைத்து வைக்க, அது கொண்டு உணரவே நாம் அதிகாரிகள், எதிலும் எங்கும் ஸம்ப்ரதாயபேதமென்று ஒன்று தோன்றியிருப்பதனால் இன்ன ஸம்ப்ரதாயஸ்தர் இன்ன ஆசார்யருடைய ஸ்ரீஸூக்திகளையே நிதியாகக் கொள்வதென்றும் அவற்றையே போஷித்துப் பேசுவதென்றும் ஒரு பத்ததி இருப்பதனால் அவரவர்கள் தம் தம் ஆசார்யருடைய ஸ்ரீஸூக்திகளில் வைத்திருக்கிற நம்பிக்கையினால் திருப்பித்திருப்பி ஸ்வமதத்தையே வலிதாக வெளியிட்டுக்கொண்டு காலங்கழிக்கிறார்கள் இந்த மருமத்தை யாரோ சில மஹாமேதாவிகளே கண்டு இப்படி பக்ஷபாதிகளாய்ப் பேசியும் எழுதியும் போருகிறவர்களின் வார்த்தைகளில் நாம் செவிகொடுக்கவோ கண் செலுத்தவோ தகாது; மத்யஸ்தர்களான ஆசாரியர்களின் திருவாக்குக்களைக் கொண்டே தத்துவத்தை உணரவேணும்' என்று துணிந்து விவாதிகளான இரண்டு ஸம்ப்ரதாயஸ்தர்களுக்கும் பொதுவாகவுள்ள ஆசாரியர்களின் ஸ்ரீஸூக்திகளையே கொண்டு தத்வநிஷ்கர்ஷம் செய்கிறார்கள். இதுதான் ராஜமார்க்கம்.

உபய ஸம்ப்ரதாயஸ்தர்களுக்கும் பொதுவாகச் சில ஆசாரியர்கள் உலகமறிய விளங்குகின்றார்களன்றோ. ஸ்ரீபாஷ்யகாரர், கூரத்தாழ்வான், பட்டர், ச்ருதப்ரகாசிகாசார்யர் என்னும் மஹாசார்யர்கள் பொதுவானவர்களென்பது நிர்விவாதம். விவாதக்ரஸ்தமான விஷயங்களை மத்யஸ்தத்ருஷ்டியுடன் நிஷ்கர்ஷிக்க வேண்டும்போது மேற்குறித்த மஹாசார்யர்களின் ஸ்ரீஸூக்திகள் எப்படியுள்ளன? என்று விமர்சிப்பதே ப்ராமாணிகர்களுக்கு உற்றது. அவர்களின் திவ்ய ஸூக்திகளில் ஸ்பஷ்டமாகத் தெரியாத விஷயங்களிருந்தால் அவற்றில் அவரவர்கள் தம் தம் [அஸாதாரண] ஆசாரியர்களின் ஸ்ரீஸூக்திகளைக்கொண்டு தெளிவுபெறலாம். பொதுவான ஆசாரியரின் திருவாக்குக்களில் ஸ்பஷ்டமாகவும் ஸூஸ்பஷ்டமாக

வும் விளங்குகின்ற விஷயங்களிற்கூட ஏகதேசிகள், தங்கள் அபிப்ராயத்தையே திடமாகக்கொண்டு போராடுவதென்பது விவேகிகளின் பணியாகுமோ ?

சிலருடைய கொள்கை என்னவெனில், மற்றையாசாரியர்களின் திருவாக்குக்கள் எப்படியாவது இருக்கட்டும் ; அவற்றைப்பற்றி நமக்கு விசாரமே வேண்டா ; நமக்கென்று வாய்த்த அஸாதாரண ஆசாரியருடைய திருவாக்கில் ஸ்பஷ்டமாக எவ்வண்ணம் வெளிவந்துளதோ அவ்வண்ணமேதான் நாம் கொள்ள வேண்டும் – என்பதாக. இக்கொள்கையைத் தப்பென்று நாம் சொல்லலாகாது. ஸ்வாசார்ய பக்தியின் கனம் விளங்குமிதில். ஆனால் இத்தகைய கொள்கை ரஹஸ்யமாக ஸ்வக்ருஹத்தினுள்ளே போற்றத்தகுமே யன்றி ஸதஸ்ஸுக்குப் பயன்படாது. விவாதம் விளையாத வளவில் க்ஷேமமே. விவாதம் வளர்ந்திட்டால் ஸ்வாசார்ய ஸூக்தியென்கிற அபிமானத்தை வெகுதூரத்தில் விலக்கிவைத்திட்டு, பொதுவான ஆசாரியர்களின் ஸ்ரீஸூக்திகளை மாத்திரமே தஞ்சமாகக் கொள்ளவேணும்.

இனி ப்ரக்ருத விஷயத்திற்கு வருவோம். எம்பெருமான் எங்கும் நிறைந்த பரஞ்சோதி யென்று உலகமனைத்தும் உணரும். “கருதரிய வுயிர்க்குயிராய்க் கரந்தெங்கும் பரந்துறையும் ஒரு தனி நாயகமென்றால் உன் பெருமைக்கு அளவாமோ ?” என்று போற்றுகிறார்கள் பக்தர்கள். அணுவான பதார்த்தங்களினுள்ளும் பகவான் நிறைந்துளன் என்பது வேதாந்திகளின் கொள்கை. (1) உட்புறம் வெளிப்புறம் என்று இரண்டிடங்கள் பகுத்து வகுத்துக் காட்டக்கூடிய பொருள்களாயிருந்தால் அவற்றில் உள்ளேயும் புகுந்துளன் என்று ஒப்புக்கொள்ளலாம் ; அணு பதார்த்தங்களுக்கு இங்ஙனே பகுத்துக் காட்டக்கூடிய நிலைமை இல்லாமையால் அப்பொருள்களில் பகவான் உள்ளேயுளன் என்று ஒப்புக்கொள்ள இயலாது—என்பது ஒரு ஆக்ஷேபம். (2) உள்ளேயுளன் என்று ஒப்புக்கொள்ளக்கூடியவிடத்திலும், பகவான் தன்னுடைய ஸ்வரூபம் எவ்வளவுண்டோ அவ்வளவும் அடங்க வியாபித்துளன் என்று இசையத்தகாது ; ஏனென்றால் ஒரு வஸ்துவிலேயே பகவானது ஸ்வரூப மடங்கலும் அடங்கிப் போகுமானால் மற்றும் உலகிலுள்ள அபரிமிதங்களான வஸ்துக்களிலும் அந்த ஸ்வரூபம் வியாபித்திருக்க வேணுமல்லவா ? அதற்கு அவகாசமில்லாமற் போகுமே. ஒரு உதாரன் தனக்குள்ள பொருள்களை யெல்லாம் ஒரு யாசகனுக்கே பூர்த்தியாகக் கொடுத்துவிட்டால் எப்படி ? மற்றுள்ள பல யாசகர்களுக்கும் கொடுக்கச் சரக்கு இருக்கவேணுமே ; (அதுபோல) பகவானும் தன் ஸ்வரூபத்தை நிச்சேஷமாக ஒரு வஸ்துவிலேயே நிரப்புகிறானென்றால் இது எப்படி ஸம்பவிக்கும் ? மற்ற வஸ்துக்களுக்கு என்ன கதி ? ஒவ்வொரு வஸ்துவிலும் நிச்சேஷமாக நிரம்பியுள்ளானென்கை பொருந்தமாட்டாது. ஒன்றில் நிச்சேஷமாக நிரம்பிவிட்டால் மற்றொன்றிலிருக்க ப்ரஸக்தியேது ? ஆகவே வஸ்துதோறும் பகவத் ஸ்வரூபம் நிச்சேஷமாக நிரம்பியுள்ளதென்று கொள்ளத்தகாது—என்பது மற்றொரு ஆக்ஷேபம்.

இவ்விரண்டு ஆக்ஷேபங்களும் இன்று நேற்று உதித்தவையல்ல ; நெடுநாளாகவேயுண்டு இவற்றை நமது பூருவாசாரியர்கள் நன்கு கண்டித்துள்ளார்கள். ஸுஸ்பஷ்டமாகக் கண்டித்திருப்பவர் ச்ருதப்ரகாசிகாசார்யர். மேலே விவரித்த இரண்டு ஆக்ஷேபங்களைக் கூசாமல் பேசவல்லவர்கள் யாராயிருக்கவேண்டுமென்பதைச் சிறிது விமர்சிப்போம். பகவானுக்கு ஒப்புயர்வற்ற சக்தி விசேஷமுண்டென்பதைப் பொறுக்ககில்லாதவர்களே இந்தக் கக்ஷிகளைக் கிளப்பவேண்டும். பகவான் அத்புத சக்தியுக்தன் என்றும் அகடித கடநாஸமர்த்தன் என்றும் பிரமாணங்கள் கூறுவதை அஞ்ஜலிபந்தத்துடன் ஏற்கவல்ல ப்ராமாணிக வேதாந்திகள் இப்படிப்பட்ட கக்ஷிகளைக் கிளப்ப ஒருபோதும் நினையார்கள். முன்வரமாட்டார்கள்.

இந்த வ்யாப்தி விஷயத்தை, அல்லது ப்ரதிவஸ்து பூர்ணத்வ விஷயத்தை விட்டிட்டு வேறு சில விஷயங்களை யெடுத்துக்கொள்வோம். ஸகல ப்ரபஞ்சங்களுக்கும் பகவானையே காரணபூதனாகக் கொள்ளுகிறோம். உலகில் ஒவ்வொரு கார்ய வஸ்துவுக்கும் மூவகைப்பட்ட காரணங்கள் வேண்டியிருக்கின்றன ; 1. உபாதாந காரணம். 2. ஸஹகாரி காரணம், 3. நிமித்த காரணம். ப்ரபஞ்ச ஸ்ருஷ்டியில் இம் மூவகைக்காரணமும் பகவானொருவனே யென்று மறைமுடி அறுதியிடுகின்றது. ஒன்றுக்கே மூவகைக் காரணத்வமும் எங்ஙனே பொருந்தும் ? உலகில் இப்படியுள்ள ஒரு வஸ்துவையாவது உவமையாக எடுத்துக்காட்ட முடியுமோ ? முடியாதே. உலகிற் காண்கிறபடிதானே பகவானிடத்தில் ஸமந்விதமாகவேணும். ஒருவனே மூவகைக்காரணமுமென்று அஸம்பத்தமாக எப்படிச் சொல்லுகிறீர்கள் ? என்று கேட்டால். பகவான் அத்புதசக்தியுக்தனாகையாலே அப்பரம புருஷனிடத்தில் எதுவும் ஸமந்விதமே, அஸம்பத்தமானது ஒன்றுமில்லை என்கிற விடை தவிர வேறொன்றும் சொல்லகில்லா வேதாந்திகள். வேதாந்த தேசிகனும் இந்த விடையைத்தான் விடுத்தருளுகிறார் ; அச்யுதசதகத்தில் *புரிஸபஹாண* ஸரீரோ என்ற ச்லோகத்திற்கு நம்முடைய விரிவான வியாக்கியானம் உலகம் பரவியுள்ளது ; வியாக்கியானமே வேண்டா ; மூலமே போதும் ; *வஹஸி ணிமித்தத்தணம் வி அப்புய ஸத்தீ—வஹஸி நிமித்தத்வமபி அத்புதசக்தி ; * என்றனன்றோ ச்லோகமுள்ளது. அத்புத சக்தியோகத்தாலே இவை கூடும் — என்றனன்றோ நிர்வஹிக்கப்பட்டுள்ளது. ஸ்ரீபாஷ்யகாராதிகளுக்கும் இந்த அத்புத சக்தியோகமே சாஸ்த்ரார்த்த நிர்வாஹங்களுக்குக் கை கொடுக்கின்றது. ஆகவேதான் "ஸகலவஸ்து விலக்ஷணஸ்ய சாஸ்த்ரைக ஸமதிகம்யஸ்ய அசிந்த்ய—அப்ரமேய—அத்புதசக்தியுக்தஸ்ய பரஸ்ய ப்ரஹ்மண ;" என்று அடிக்கடி அருளிச் செய்யப்படுகிறது. மேற்குறித்த வாக்யங்கள் ஸ்ரீபாஷ்ய தீப ஸாராதிகளில் நூற்றுக்கணக்கான இடங்களில் காணலாகும்.

முடிவாக நிதியொன்று காட்டுகிறேன் ; அடியேன்வரையில் தேசிக திவ்ய ஸூக்தியே பரமப்ரமாணம். ஸ்வாமி பரமதபங்கரஹஸ்யத்தில் (4) பரதத்வாதிகாரத்தில் இதைப்பற்றி அருளிச் செய்திருப்பதுண்டே. அதுதான் நிதியானது. (அதாவது) "ஸர்வவ்யாப்தி சொன்னவிடத்தில் அந்தர்வ்யாப்தியாவது— நிரவயவங்களோடு ஸாவயவங்களோடு வாசியற அவையுள்ளவிடத்தில் இவனில்லையென்னுதபடி ப்ரதிகாதமற்று நீங்காதபடி நிற்கை. இதில் ப்ரதிவஸ்து பூர்ணத்வம் ஜ்ஞானசக்த்யாதி ஸங்கோசாபாவத்தாலே கண்டுகொள்வது." என்கிற ஸ்ரீஸூக்திகளைக் கண்டுகொள்வது. ஆக, நியாயஸித்தாஞ்ஜநம், ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரம், பரமதபங்கம் — மூன்றிலும் ஸாதித்தவற்றை ப்ராமாணிகர்கள் ஸமந்வயம் செய்துகொள்ளக் கடவர்கள். ... *

ஸ்ரீமத் வரவரமுநிவர்ய ஸித்தாந்தஸாரத்தின் முதல் பரிச்சேதம் முற்றிற்று.

# பிராட்டியின் விஷயமான விசாரங்களுக்கு அவதாரிகை

பிராட்டிதிறத்தில் மூன்று வகையான விவாதங்கள் விளைந்திருக்கின்றன. (1) பிராட்டியும் எம்பெருமானைப்போலே உபாய பூதை; (அதாவது) முக்தியளிப்பதில் எம்பெருமானுக்குப்போலே பிராட்டிக்கும் ஸ்வதந்த்ராதிகாரமுண்டு; (2) பிராட்டிக்கும் விபுத்வமுண்டு. (அதாவது) எம்பெருமான் ஸ்வரூபம் எப்படி விபுவோ அப்படியே பிராட்டியின் ஸ்வரூபமும் விபு. (3) பிராட்டிக்கும் ஜகத்காரணத்வமுண்டு—என்பதான மூன்று அம்சங்களை நவீநர் கூறுகின்றார்கள். நம் பூர்வாசார்யஸித்தாந்தத்தில் (1) பிராட்டிக்குப் புருஷகாரத்வ மாத்ரமேயுள்ளது. உபாயத்வமில்லையென்றும்; (2) ஜீவ நிர்விசேஷமாக அணுத்வமே யுள்ளது. விபுத்வமில்லை யென்றும், (3) ஜகத்ஸ்ருஷ்டியில் பிராட்டி ஸாக்ஷிபூதையே யல்லது ஸாக்ஷாத் ஜகத்காரணத்வம் இவளுக்கு இல்லையென்றும் அருளிச்செய்யப்படுகிறது. கீழே விவரித்தபடி பிறர் கூறுகின்ற மூன்று அம்சங்களும் பிராட்டியின் பெருமையைப் பேசுவனவாதலால் அப்படிப்பட்ட பெருமைகள் அவளுக்கு இல்லையென்று கூற நாம் முன்வரவேண்டிய அவசியமில்லை. *பண்டை நாளாலே நின் திருவருளும் பங்கயத்தாள் திருவருளுங்கொண்டு* என்று ஆழ்வாரருளிச்செய்தபடியே பகவத்கடாக்ஷ லக்ஷ்மீகடாக்ஷங்களைச் சேமநிதியாகக் கொண்டு *தைவதம் தம்பதீ ந:* என்று தேசிகனருளிச்செய்தபடியே திவ்ய தம்பதிகளிருவரையும் தைவமாகக் கொண்டிருக்கிற நாம் 'பிராட்டிக்கு உபாயத்வமில்லை, விபுத்வமில்லை, காரணத்வமில்லை' என்று சொல்லப் புறப்படுவது எதற்கு? வஸ்துத: அவை இல்லாமலிருந்தாலும் உண்டென்று பிறர்சொன்னால் வைபவவாதமே பண்ணிப் போரவேண்டிய பக்தர்களுக்கு அதைக் கண்டித்து ஆகவேண்டியது ஒன்றுமில்லையே, அப்படியே சொல்லிக்கொள்கவென்று இருந்தால் ஹாநி ஒன்றுமில்லையே யென்று சிலர்க்குத் தோன்றக்கூடும். சாஸ்த்ரார்த்த நிஷ்கர்ஷம் என்கிற துறையில் உள்ளபடி தத்துவத்தை விளக்கவேண்டுவது விவேகிகளின் கடமை.

பட்டர் ஸ்ரீகுணரத்ந கோசத்திலே *ச்ரியம் த்வத்தோபி உச்சைர் வயமிஹ பணாம:* என்று பெருமாளைக்காட்டிலும் பிராட்டியை உயர்த்திக் கூறப்போவதாக ப்ரதிஜ்ஞை பண்ணியே தோத்திரம் செய்ய இழிந்தார். அப்படியே *தவ ஸ்பர்சா தீசம் ஸ்ப்ருசதி கமலே! மங்களபதம்* இத்யாதிச்லோகங்களால் உயர்த்தியேகூறினர். அவற்றால் சாஸ்த்ரார்த்த க்ஷோபமொன்றுமில்லை. தேசிகன் கோதாஸ்துதியில் அற்புதமாக வொரு ச்லோகமருளிச் செய்கிறார். *ரங்கேச்வரஸ்ய தவச* இத்யாதி (2 -ச்லோ) இதில், *வாசாலயந்தி வஸுதே! ரஸிகாஸ் த்ரிலோகீம் ந்யூநாதிகத்வஸமதாவிஷயைர் விவாதை:* என்ற உத்தரார்த்தத்திலுறையும் தாற்பரியம் இன்சுவை மிக்கது. ஆண்டாளுக்கும் ரங்கமன்னார்க்கும் மாலை மாற்றல் நடைபெறும்போது ரஸிகர்கள் குழாம் கூடி மூவகையான வாதங்களைச் செய்து கோஷிக்கின்றார்களாம். பெருமாளைத் தாழ்த்தி ஆண்டாளை உயர்த்திப் பேசுவாரும், ஆண்டாளைத் தாழ்த்திப் பெருமாளை உயர்த்திப் பேசுவாரும், இருவரும் ஏற்றத்தாழ்வு இன்றியே ஸமமாகவே விளங்குகின்றனரென்று பேசுவாருமாய் இங்ஙனே பேச்சுக்கள் அதிகரித்துப் பேரொலியுண்டாயிற்றென்கிறார். எம்பெருமானுக்கு சேஷித்வமும் பிராட்டிக்கு சேஷத்வமும், அப்படியே எம்பெருமானுக்கு ஸகலஜகத்பதித்வப்ரயுக்தமான ஏற்றமும் பிராட்டிக்குப் பத்நீத்வப்ரயுக்தமான

தாழ்வும் அபலபிக்கவொண்ணுதவை. ஆகவிப்படி சாஸ்த்ரீயமான ஏற்றத்தாழ்வு இருக்கச் செய்தேயும், ஒரு அபிமாந விசேஷத்தினுல் *ஜ்ஞாநீது ஆத்மைவ மே மதம்* என்று எம்பெருமானும் சொல்லிவைத்த கணக்கிலே பிராட்டியை உயர்த்தியும் எம் பெருமானைத் தாழ்த்தியும், இருவரையும் ஸமதுலையிலே வைத்தும் ரஸிகர்கள் பேசுவ தாக தேசிகன் ஸாதிக்கிருர்.

நம் ஆசாரியர்கள் பிராட்டியினிடம் பகை கொண்டவர்களல்லர். அவளுடைய வைபவத்தைக் குறைத்துப்பேச நினைத்தாரொருவருமிலர். அதீந்த்ரியமான விஷயங் களில் சாஸ்த்ரஸித்தமான அர்த்தங்களையே நாம் பேணக் கடமைப் பட்டிருக்கிருேம். மோக்ஷப்ரதத்வமோ விபுத்வமோ ஜகத்காரணத்வமோ இவை லக்ஷ்மீவிசிஷ்டனுன எம்பெருமானுக்கேயல்லது லக்ஷ்மிக்குத் தனியாக இல்லையென்பதே சாஸ்த்ர ஸம்ப்ரதி பந்நமான ஸத்ஸம்ப்ரதாயம். தேசிகன் திருவுள்ளமும் பெரும்பாலுமிதுவேயாகும். அவர் சதுச்ச்லோகீபாஷ்யத்தில் பல பக்ஷங்களை உபக்ஷேபித்துக்கொண்டு போந்து *பஞ்சஸ்வேதேஷு பக்ஷேஷு கச்சிதேக: ப்ரமாணவாந்* என்று நிர்ப்பரமின்றிக்கே தலைக்கட்டினுர். அதாவது, "இந்த ஐந்து பக்ஷங்களுள் ஏதாவது ஒரு பக்ஷமே ப்ரா மாணிகம்" என்ருர். அவ்வளவோடும் நில்லாமல் உத்தரார்த்தம் பணித்தபடி காண் மின்—*ஸபத்நீகஸ்ய ஸாம்ராஜ்யம் ஸர்வதா ஸுப்ரதிஷ்டிதம்* என்ருர். அதாவது, எம்பெருமானுக்குச் சொல்லப்படும் உயர்த்திகளெல்லாம் தனிமைப்பட்ட அவனுக் கல்ல, பிராட்டியோடு கூடியிருந்துள்ளவனுக்கே என்றபடி. ஆகவே மோக்ஷப்ரதத் வாதிகளைப் பிராட்டிக்குத் தனியாக ஸாதிப்பதில் தேசிகனுக்கும் திருவுள்ளமில்லையென் பது விளங்கிற்று.

இதற்கு மற்ருெரு சான்றும் நன்கு காட்டுகிருேம் காண்மின். யாதவாப்யுத யத்தில் பன்னிரண்டாவது ஸர்க்கம் ருக்மிணிப் பிராட்டி விஷயமென்பது ப்ரஸித்தம். அதில் முதலிரண்டு ச்லோகங்களில் ஸாக்ஷாத் ஸ்ரீ மஹாலக்ஷ்மியே ருக்மிணியாக அவதரித்தமை சொல்லிற்று. மேல் மூன்ருவது ச்லோகம் *சிகண்டகம் நிஷ்ப்ரதிமம் ச்ருதீநாம் ச்ருங்காரலீலோபம விச்வக்ருத்யம், அதீயதே தந்மிதுநம் ஸ்வபாவாத் அந்யோந்யஜீவாது மநந்யபோக்யம்* என்றுள்ளது. அதற்கு மேல் உள்ள ச்லோகங்க ளெல்லாம் ருக்மிணிப் பிராட்டியை மாத்திரம் பற்றியவை. முதலிரண்டு ச்லோகங் களும் அப்படியே. இடையில் மூன்ருவது ச்லோகமொன்று மாத்திரம் மிதுநம் என்ற நிர்தேசமுடையது. இந்த ச்லோகத்தில் *ச்ருங்கார லீலோபம விச்வக்ருத்யம்* என் கிற இரண்டாவது பாதத்திற்கு *ச்ருங்காரலீலாவத் அநாயாஸஸாத்ய விநோதரூப ஜகத்ஸ்ருஷ்டி ஸம்ஹாராதிக்ருத்யம்* என்று வியாக்கியானம். இந்த க்ருத்யத்தைப் பிராட்டியினிடத்தில் தனியே பேசக்கூசியன்ருே தேசிகன் மிதுந மென்றிட்டு இடை யில் விலக்ஷணமான ச்லோகமொன்றை இயற்றினுர்.

ஸ்ரீஸ்துதியிலும் *யத்ஸங்கல்பாத் பவதி கமலே! யத்ர தேஹிந்யமீஷாம் ஜந்ம ஸ்தேமப்ரலயரசநா ஜங்கமாஜங்கமாநாம், தத் கல்யாணம் கிமபி யமிநாம் ஏகலக்ஷ்யம் ஸமாதௌ பூர்ணம் தேஜ: ஸ்புரதி பவதீ பாதலாக்ஷாரஸாங்கம்* என்ருர். இந்த ச்லோகமொன்றே லக்ஷ்மீதத்வத்தை நிர்த்தாரணம் செய்யப் போதுமன்ருே. இங்கு லக்ஷ்மியைத் துதிக்க விழிந்த தேசிகன் லக்ஷ்மியினிடத்திலுள்ள தர்மத்தையேயன்ருே

கூறித் துதிக்கவேணும். இங்கு எங்ஙனம் துதித்திருக்கிருரென்று பார்க்கவேணும்:
லக்ஷ்மியினிடத்தில் தனிப்பட இல்லாத தர்மத்தை அவளிடத்துள்ளதாகக் கூற எங்ங
னம் துணிவர்? *ஜங்கமாஜங்கமாநாம் ஜந்மஸ்தேமப்ரலயரசநாம் இந்திரே! த்வம்
கரோஷி* = ஸ்ரீமஹாலக்ஷ்மியே! நீரே ஜங்கமஸ்தாவரங்களினுடைய ஸ்ருஷ்டி ஸ்திதி
ஸம்ஹாரங்களைச் செய்கிறீர்'' என்று வைத்து ச்லோகமியற்றலாமே; அப்படியியற்ற
வில்லைகாணீர்.அந்த ஜந்மஸ்தேமப்ரளயரசநையானது உண்மையில்பரமபுருஷனுக்கே
உள்ளதென்றும் ததநுக்ராஹகத்வமே இவளிடத்துள்ள தென்றும் ஆழ்வான் பட்டர்
முதலானோர் *ஸ்வஸ்தி ஸ்ரீர் திசதாதசேஷஜகதாம்......யத்ப்ரூபங்கா: ப்ரமாணம்*
என்பவை முதலான ஸ்ரீஸூக்திகளால் நன்கு காட்டியுள்ளார்களென்பதை யுணர்ந்த
தேசிகன் வேறு வகையாக எங்ஙனே பணிக்கக்கூடும்?

ஸ்ரீபாஷ்யத்தில் *விநத விவிதபூதவ்ராத ரக்ஷைகதீக்ஷே* என்றவிடத்து ச்ருதப்ர
காசிகையில் 'ஜகத்காரணத்வமோக்ஷப்ரதத்வே ஹி ராஜ்ஞஶ்ச்சத்ரசாமரவத் ப்ரஹ்
மண: அஸாதாரண சிஹ்நம்* என்றருளிச் செய்யப்பட்டது. அந்த ஸ்ரீ ஸூக்தியை
யநுஸரித்தே தேசிகனும் ரஹஸ்யத்ரயஸாரத்தில் பரிபூர்ண ப்ரஹ்மாநுபவாதிகாரத்தில்
—''ஈச்வரனுக்குச் சாமராதிகளைப் போலே லக்ஷணமாகச் சொன்ன ஜகத்காரணத்வ
மோக்ஷப்ரதத்வ லக்ஷ்மீஸஹாயத்வாதிகள் ப்ரதிநியதங்கள்'' என்றார். இந்த மஹா
வாக்யத்தில் ஜகத்காரணத்வத்தை முதலிலேவைத்து லக்ஷ்மீஸஹாயத்வத்தை முடி
விலே வைத்திருப்பது குறிக்கொள்ளத்தக்கது. லக்ஷ்மீஸஹாயத்வமானது எப்படி
லக்ஷ்மியினிடத்தில் ஸம்பவியாதோ அப்படியே ஜகத்காரணத்வமும் அவளிடத்தில்
ஸம்பவியாது, பரப்ரஹ்மத்திற்கே ஸம்பவிக்கும்—என்று விளக்கினபடியன்றோ?

ந்யாயஸித்தாஞ்ஜநத்திலும் ஜீவபரிச்சேதத்தில் *ஸ்ருஷ்ட்யாதிஜகத்வ்யாபார
மோக்ஷப்ரதத்வ முமுக்ஷூபாஸ்யத்வ ஸர்வசேஷித்வாதிரூப பகவதஸாதாரணதர்ம...*
இத்யாதிவாக்யத்தால் இவ்வர்த்தந்தன்னையே பிரதிபாதித்தார். முநிவாஹந போகத்
திலும் முதற்பாட்டின் வியாக்கியானத்தில். ''[ஆதி] ஸர்வஜகதேக காரணபூதன்...
இக்காரணத்வமும்.மோக்ஷப்ரதத்வமும் ச்சத்ரசாமரங்கள் போலே ஸர்வலோகஶரண்ய
னுக்கே விசேஷ சிஹ்நங்கள்'' என்று பணித்தார். இத்தகைய ப்ரமாணகதிகள் பல
பலவுள்ளன. இங்கு நாம் இவ்விஷயங்களை ஒவ்வொன்ருக எடுத்துக்கொண்டு
ஸித்தாந்தத்திலுள்ள உபபத்திகளை மூதலிக்கவேணும். ஆனால் இங்கு விரிவுகொள்
ளாமல்பிராட்டிக்குப்புருஷகாரத்வமேவடிவுஎன்னும்விஷயத்தைமட்டும்விளக்குவோம்.

மந்த்ரரத்நமென்று புகழ்பெற்ற த்வயமென்னும் ரஹஸ்யமானது பூர்வகண்ட
மென்றும் உத்தரகண்டமென்றும் இரண்டு கூறுகளாகவுள்ளது. இவ்விரண்டு கூறு
களிலும் ஸ்ரீமத் பதம் இருந்துகொண்டு நாராயணனுக்கு லக்ஷ்மீஸம்பந்தத்தைக்
காட்டியிருக்கின்றது. பூர்வகண்டத்தில் பிராட்டியை முன்னிட்டு [அதாவது பிராட்
டியைப் புருஷகாரமாகக் கொண்டு] எம்பெருமான் திருவடிகளை உபாயமாகப் பற்றுகிற
தென்றும், உத்தரகண்டத்தில் பிராட்டியும் பெருமாளுமான சேர்த்தியிலே அடிமை
செய்ய அர்த்திக்கிறதென்றும் ஸமகண்டமாக ஸகலாசார்யர்களும் நிர்வஹித்தருளி
யுள்ளார்கள். மோக்ஷமளிக்குமாற்றல் [அதாவது மோக்ஷப்ரதத்வமாகிற உபாயத்வம்]
பிராட்டிக்கும் உண்டென்று பிறர் சொல்லுவதாக ஒரு ப்ரஸ்தாவம் உள்ளதானது மிக

வும் அஸ்தாநே. ஏனெனில், பிராட்டிக்குப் புருஷகாரத்வத்தை யிசைந்துவிட்டால் அவளுக்கு உபாயத்வமுமுண்டென்று வாய் திறக்க வழியேது? இருளும் ஒளியும் ஓரிடத்தில் ஒன்று சேர்ந்திருக்கமாட்டாதது போலவே புருஷகாரத்வமும் உபாயத்வமும் ஒரு வ்யக்தியில் ஒன்று சேர்ந்திருக்கமுடியாதே. எம்பெருமானைப் போலே பிராட்டியும் முக்தி ஸாம்ராஜ்யத்தை அருளவல்லவளாகில் இவள் புருஷகாரக்ருத்யத்திலே கை வைத்துத் துவளவேண்டிய அவசியமே யிருக்கமாட்டாதே. ஒரு பொருளை ஸ்வயமேவ அளிக்க சக்திவாய்ந்த வ்யக்தி அப்பொருளைக் கொடுப்பிக்க மற்றொருவரிடத்தில் ப்ரயாஸப்பட ப்ரஸக்தியுண்டோ? இது ஸர்வாத்மநா அஸம்பாவிதமென்று உணருவதில் என்ன ச்ரமம். *தாதா ந தாபயதி தாபயிதா ந தத்தே* என்று விநோதமாகச் சொல்லுவர்.

உலகத்தில் நன்குபார்க்கலாம். ஒரு பொருளைக் கொடுப்பிக்கிறவராக ஒருவர் ஏற்பட்டால் அவர்தாமே அந்தப் பொருளை ஸ்வயம் கொடுக்கவல்லவராகவும் இருக்க முடியாது. சிபார்சு செய்கிறவர் என்று ஒருவரை நாம் ஒப்புக்கொண்டால், அவருக்கு சிபார்சு செய்கிற தொழில் ஒன்றுதான் பொருந்தும். எந்தவஸ்துவுக்காகச் சிபார்சு செய்கிறாரோ அந்த வஸ்துவை அவரே கொடுக்கவும் வல்லவர் என்று சொல்லுவதானது அர்த்தமில்லாத வார்த்தையேயாகும். அந்த வஸ்துவைத் தாமே கொடுக்க வல்லவரானால் அவர் இன்னொருவரிடத்தில் சென்று சிபார்சு செய்கிற வருத்தத்தை ஏற்றுக்கொள்ளவேமாட்டார், சிபார்சு செய்வதென்பது பர்யாயமாய் யாசகத் தொழிலேயாகும். தாமே கொடுக்க ப்ராப்தியில்லாதவரே பிறரிடம் சென்று 'இதை நீ கொடுக்க வேணும்' என்று இரக்கக்கூடும். ''நான் ஐம்பது ரூபா கொடுக்கிறேன் நீரும் 100, 200 கொடுக்கவேணும்'' என்றாற்போலே சிபார்சு செய்யும் விஷயமன்றோ இது.

'பிராட்டிக்குப் புருஷகாரத்வ மில்லை' உபாயத்வம் மாத்திரமேயுள்ளது' என்று சொல்லுவதானால் அது ஒருவாறு பொருந்தும். புருஷகாரத்வத்தை அவளுக்கு இசைந்து கொடு நின்ற பின்பு கூடவே உபாயத்வமும் உண்டென்று வாய் திறக்கவுண்டோவழி? நம்மைப்போன்ற ஆர்த்தர்கள் திறத்தில்காருணிகனானஎம்பெருமானைக்காட்டிலும்பிராட்டிக்கே காருண்யம் கனத்ததென்பது விவாதமற்ற விஷயம். இத்தகைய காருண்யமுள்ள பிராட்டிதனக்கே முக்தியளிக்க வல்லமையுமிருக்குமாகில் அந்த முக்தியைத் தானே அளித்திடாமல் நிரங்குச ஸ்வதந்த்ரனான பகவானிடத்தில் புருஷகாரஞ்செய்து மன்றாடுவது ஏதுக்காகவென்று சிந்திக்கவேண்டுமே விவேகிகள். ஏனோ இதில் மருள்?

எம்பெருமான் ஒருநாளும் புருஷகாரக்ருத்யத்தில் கை வைப்பதில்லை யென்றும் இத்தொழிலை எப்போதும் பிராட்டியே நடத்திவருகிறாளென்றும் ப்ரஸித்தமாகவுள்ளது. இதனை ஊன்றி நோக்கினாலும், புருஷகாரத்வமே பிராட்டிக்குள்ள தென்னும் தத்துவம் நன்கு உணரப்பட்டதாகும். புருஷகாரத்வமாவது தாபயித்ருத்வம்—கொடுப்பித்தல். உபாயத்வமாவது *தாத்ருத்வம்*—தானே கொடுத்தல். இவ்விரண்டும் ஏக வஸ்துவிஷயகமாய் ஏகவ்யக்தியில் இருக்கமுடியாதென்பதைத் திடமாக நெஞ்சிற் கொள்ளவேணும்.

ஸ்ரீ வசநபூஷணத்தில் ''புருஷகாரக்ருத்யத்தையும் உபாயக்ருத்யத்தையும் தானே ஏறிட்டுக்கொள்ளுகையாலே'' என்றொரு ஸ்ரீஸூக்தி காண்கிறதே, அது என்ன?

என்று ஒரு சங்கை தோன்றவுங் கூடும். கேண்மின்; எம்பெருமான் பிராட்டியின் புருஷகாரத்தை யெதிர்பாராமல் தானே காரியஞ் செய்தானென்பதை யன்றோ அந்த ஸ்ரீ ஸூக்தி சொல்லுகின்றது. எம்பெருமான் பிறரொருவரிடத்துச் சென்று புருஷகாரஞ் செய்ததாக இங்கு விவக்ஷிதமே யல்ல. மணவாளமாமுனிகளின் வியாக்கியானம் ஸேவித்தும் தெளியலாம். ஆகவே புருஷகாரத்வமும் உபாயத்வமும் ஏகவ்யக்தியிலே கூடமாட்டாதென்பது கல்வெட்டு.

த்வாதசியன்று ஸூர்யக்ரஹணம் நேர்ந்தால் பாரணைக்கு ப்ராதாந்யமா? உபராக ப்ரயுக்தமான உபவாஸத்திற்கு ப்ராதாந்யமா? என்று ஒருவர் தர்மஸந்தேஹம் கேட்க, த்வாதசியாசையாலே பாரணைக்குத்தான் ப்ராபல்யம் என்று ஸஞ்சிகையெழுதுவாருளர்; த்வாதசியன்று க்ரஹணம் நேருவதெப்படியென்கிற விசாரத்தில் அந்தோ புத்தி செல்லுவதில்லை. அதுபோலவே இவ்விஷயத்திலும், நியமேந வ்யதிகரண தர்மங்களான புருஷகாரத்வ உபாயத்வங்களுக்கு ஸாமாநாதிகரண்யம் எங்ஙனே கூடும்? என்று இந்த மிகச் சிறு விஷயத்தை ஆராயகில்லாது வாத விவாதங்களை வளர்த்துகின்றார்களென்றால் இதனிலும் மிக்க வியப்பு வையகத்திலுண்டோ?

சதுச்ச்லோகியில் மூன்றாவது ச்லோகத்தின் பாஷ்யத்தில் தேசிகன் இவ்வளவு விஷயங்களையும் திருவுள்ளத்தில் அமைத்துக் கொண்டு அழகாக அருளிச்செய்கிறார் காண்மின்:—*மோக்ஷப்ரதே பகவதி முமுக்ஷூணாம் கடகதயா ஏஷா திஷ்டதீதி ஸர்வ ஸம்மதம்* என்பது அவ்விடத்து ஸ்ரீ ஸூக்தி. 'எம்பெருமான் தான் மோக்ஷமளிப்பவன்; அதனைப்பெறுவிப்பவளாகமாத்திரம்பிராட்டி இராநின்றாள்' என்பதுஇந்தஸ்ரீஸூக்தியின் கருத்து. அதற்குமேலுள்ள ஸ்ரீ ஸூக்திகளும் பிராட்டிக்கு உபாயத்வமில்லை யென்பதையே நிலைநாட்டுவன. உலகத்தில், கொடுப்பிக்கின்ற மஹான்களையே ஸாக்ஷாத் கொடுப்பவர்களாகவும் புகழ்ந்து கூறுகிற முறை உண்டாதலால் அவ்வண்ணமாகவே பிராட்டி விஷயத்திலு மாகலாமேயென்னில், இது மிகவும் ஸமஞ்ஜஸமான வாதம். *ச்ரியம் லோகே தேவஜுஷ்டா முதாராம்* பரமம் பதம் வா கஸ்மைசித் அஞ்ஜலிபரம் வஹதே விதீர்ய* இத்யாதி ப்ரமாணங்களைப் பின்சென்று அழகாகச் சொல்லக்கூடிய வார்த்தை இதுவே. இந்த நிர்வாஹமே தேசிக ஸூக்திகளோடு நன்கு பொருந்தும்.

**—மிகமுக்கியமான தேசிக ஸூக்திகள்—**

தேசிகன் ரஹஸ்ய ரத்நாவளியிலே "ஸ்ரீமானான நாராயணனொருவனுமே ஸர்வ ஜீவர்களுக்கும் தஞ்சம்...... ஸர்வ ஸ்வாமிநியாய் ஸர்வேச்வரனுக்கு சேஷமாய் ஸஹ தர்ம சாரிணியான பெரிய பிராட்டியார் இத்தலையில் வாத்ஸல்யாதிசயத்தாலும் அத்தலையில் வால்லப்யாதிசயத்தாலும் புருஷகாரமாய்க் கொண்டு இஜ்ஜீவர்களுக்குத் தஞ்சமாகிறாள்." என்றார். இதைவிட வேறு விளக்கு வேணுமோ?

ந்யாயஸித்தாஞ்ஜநத்தில், *இயம் கேவலலக்ஷ்மீசோபாயத்வப்ரத்யயாத்மிகா* என்றது ப்ரஸித்தம். லக்ஷ்மீநாதனை உபாயமாகக் கொள்வதுதான் ப்ரபத்தியின் வேஷமென்று இதில் நன்கு காட்டப்பட்டது *லக்ஷ்மீ ததீசோபாயத்வாத்யவஸாயாத்மிகா த்வியம்* என்று எளிதாகச் சொல்லலாமாயிருக்க அங்ஙனம் சொல்லாதுவிட்டது ஆராயத்தக்கது. இப்படிப்பட்ட ஸூக்திகள் பல்லாயிரம் கிடைக்கும். ஸதாசார்ய ஸூக்தி ரக்ஷா முதலிய நூல்களிலே மிக விரிவாக உரைத்துளோம்.

பிராட்டி செய்தருளும் கார்யம் ஏதென்னில், அப்பெருமான் நிக்ரஹோந்முகனாயிருக்கும் காலத்தில்நிக்ரஹேச்சையைத் தவிர்க்கப் பார்ப்பதும், அநுக்ரஹோந்முகனாயிருக்கிற காலத்தில் அவ்வநுக்ரஹத்தை இன்னும் பெருகச் செய்யப் பார்ப்பதும் ஆகிய இவையே பிராட்டி செய்யும் செயல் என்பதாம். சாஸ்த்ரார்த்த மருமத்தை இங்ஙனே நிஷ்கர்ஷித்துப் பேசியிருக்க, பிராட்டிக்கும் உபாயத்வமுண்டென்கிற வாதம் எங்ஙனே பொருந்தும்? எம்பெருமானுக்கு உபாயத்வமும் பிராட்டிக்குப் புருஷகாரத்வமுமே வ்யவஸ்திதமென்று நிஷ்கர்ஷிப்பதே நிஷ்கண்டகமான ஸத்ஸம்ப்ரதாயமென்று தேறிற்று.

## விலக்ஷணஸூக்தி விசேஷ விமர்சனங்கள்

*அவிஜ்ஞாதம் விஜாநதாம் விஜ்ஞாதமவிஜாநதாம்,
இதி ப்ரஸித்தக்ரந்தஸ்தா: ச்ரூயந்தாம் விஷயா இஹ.*

ஸித்தோபாயசோதநமென்றும் ஸாத்யோபாயசோதநமென்றும் அர்த்தமற்றவிபாகங்களிரண்டிட்டு "அவர்கள் அப்படி கலங்குவர்கள், இவர்கள் இப்படி கலங்குவர்கள்; அந்த கலக்கத்தை சமிப்பித்தோம்; இந்த கலக்கத்தை சமிப்பிக்கிறோம்" என்றவையெல்லாம் தங்களுடைய கலக்கங்களையே விளங்கக்காட்டினபடி. ஸங்கல்ப ஸூர்யோதயத்திலே "நிஜமுகதோஷம் நிர்மலேஷ்வபி தர்ப்பணேஷு ஸமர்ப்பயந்தி" என்பதொரு அற்புதமான ஸூக்தியுண்டு. அதே கதைதான். மோர்க்குறிப்பொட்டு என்னும்படியான சில ப்ரமாணவசனங்களையடுக்கிக்கொண்டுபோய் "இப்படி மத்யஸ்த த்ருஷ்டியாலே ப்ராமாணிகார்த்தங்கள் தோற்றச் செய்தே பற்றினது விடாதொழியில் *த்ருடபூர்வச்ருதோ மூர்க்க: தர்மஜ்ஞமவிசாரத:.........அந்யதா மந்தபுத்தீநாம் ப்ரதிபாதி துராத்மநாம்......* என்கிற தசையாம்" என்று தலைக்கட்டியுள்ளார். இந்த ஸத்காரங்கள் யாருக்கு? மத்யஸ்தத்ருஷ்டியாலே தோற்றின அர்த்தங்கள் எவை? பற்றினது விடாதே பேசினவர்கள் யார்? அப்படி பேசின அர்த்தங்கள் எவை? என்று ஐம்பது வருஷங்களுக்கு மேலாகக் கேட்டுவருகிறோம். விடையளிப்பாரில்லை. அளிக்க வல்லார் *ஜம்பூத்வீபே பாரதவர்ஷே பரதகண்டே மேரோர் தக்ஷிணே உத்தரே ச பார்ச்வே* இல்லை இல்லை என்றுமெழுதியிருக்கிறோம். *த்ருட பூர்வச்ருத:* என்பதற்கு என்ன பொருள்? என்று விமர்சிப்போம். ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஜீவாதுவில் காண்கிற காரிகைகளாவன;—

"பூர்வாசார்யேப்ய: ச்ருதா அர்த்தா: ஸுத்ருடாஸ் ஸந்தி யஸ்ய ஸ:,
த்ருடபூர்வச்ருத: ச்லாக்ய: தம் விவேகீ ந தூஷயேத்.
பஹுச்ருதோ யதா ச்லாக்ய: த்ருடபூர்வச்ருதஸ் ததா,
ச்லாகநீயம் மஹாத்மாநம் விநிந்தந் மூர்க்க ஏவ ஹி.*

இத்யாதிகள். இதை நன்கு விளக்குகிறோம். **த்ருடபூர்வச்ருத:** என்கிற பதம் பஹுவ்ரீஹிகர்ப்பமானது. இதற்கு விக்ரஹம் சொல்லவேணுமானால், பூர்வேப்ய: ச்ருதம்—பூர்வச்ருதம்; த்ருடம் பூர்வச்ருதம் யஸ்ய ஸ: — த்ருடபூர்வச்ருத:. இவ்விதமான விக்ரஹம் தவிர வேறுவிதமான விக்ரஹம் ஸம்ஸ்க்ருத பண்டிதர்களால் சொல்ல முடியாது.

*பூர்வே பூர்வேப்யோ வச ஏதது:சு:* என்று காடகத்திலோதினபடியே முன்னோர்கள் பரம்பரையாக மொழிந்தவற்றைத் திடமாக நெஞ்சிற்கொண்டிருப்பவர்கள் தாம் த்ருடபூர்வச்ருதர்கள். பூர்வச்ருதங்களான அர்த்தங்களை மறந்துவிடாமல் திட

மாக வைத்துக்கொள்பவர்கள் எவ்வளவோ பாக்யஶாலிகள். அன்னவர்கள் துர்லபர்
களுமாவர். அவர்கள் கிடைத்தால் வணங்கி வழிபட்டு ஸ்ரீபாததீர்த்தமும் ஸ்வீகரிக்க
வேணும். பஹுச்ருதர்கள் என்று சிலரைக் கொண்டாடுகிறோம்; அவர்களைக் காட்டிலும்
த்ருடபூர்வச்ருதர்கள் மிக மேம்பட்டவர்கள். *ஏற்றகலங்களெதிர்பொங்கி மீதளிப்ப
மாற்றுதே பால்சொரியும் வள்ளல் பெரும்பசுக்களான ஸதாசாரியர்கள் பக்கலில் கேட்
டுத் தரித்துவைத்துக் கொண்டிருப்பவர்கள் த்ருடபூர்வச்ருதர்கள். அன்னவர்களை
மூர்க்கரென்று பழிப்பது மிக்கஸாஹஸம். இதெல்லாம் ப்ரக்ஷிப்தமேயாம்.

ஸங்கல்பஸூர்யோதயத்தில்—*திமிம் கில திமிங்கிலோ கிலதி தத்கிலஸ் தம்
ததா தமப்யத ச தத்கில: ...... நிவ்ருத்திமபி தர்மமத்தி அநகதத்வவிந்நிக்ரஹ:* என்
பது ஓர் அற்புதமான சுலோகம். இதன் பொருள் தெரியுமா? திமிங்கிலம் என்று
ஒரு ஜலஜந்து ப்ரஸித்தம்; [திமிம் கிலதீதி திமிங்கில:] திமி என்ற ஜந்துவை
விழுங்குவதனால் திமிங்கிலமென்று பேர்பெற்றதாம். அதையும் விழுங்குகிற ஜந்து
வொன்றிருக்கிறதாம்; அதற்குத் திமிங்கிலகிலம் என்று பெயராம். இப்படியே
கிலகிலபரம்பரை நெடுகிச் செல்லுகிறதாம். அதேபோல், [ஸமஸ்தவ்ருஜிநோததீத்
யாதி] *நாஸ்தி நிஷ்க்ருதி:* என்னும்படியாகவுமுள்ள ஸகல பாவங்களையும் விழுங்க
வல்ல ஶரணாகதிதர்மத்தையும் விழுங்கவல்லதாம் பாகவதாபசாரம். *த்ரஸ்ய ப்ரஹ்ம
விதாகஸ:* = பாகவதாபசாரத்திற்கு அஞ்சவேணும் என்கிற வசனமும் உதாஹரிக்கு
மவர்கள் எழுதத்தகாத வார்த்தைகளன்றோ மலிந்து கிடக்கின்றன. *இதி மந்தைரிதம்
ப்ரோக்தம்* என்ற காரிகையொன்று ஸ்ரீமத்கம்பீரமானது. திருக்குருகைப்பிரான்
பிள்ளானுடைய ஸ்ரீஸூக்தியைக்கண்டித்தது பிறரறியாதபடிக்கு *மத்யோபஹதபாத்ர
ஸ்த* இத்யாதியான காரிகையிட்டதுபோல், பட்டருடைய ஸ்ரீஸூக்தியைக் கண்டித்
ததும் பிறரறியாதபடிக்குஒருகாரிகையிட்டிருக்கிறார் என்பதையும் நிரூபிக்கக்கேண்மின்.
காரிகையோடு நிற்கவில்லை: விபுலதூஷணமுமுண்டு.

ஸித்தோபாய ஶோதனத்தில்—"ஸர்வ ரக்ஷண யஜ்ஞ தீக்ஷிதனான ஸர்வேச்
வரனுக்கு ஸ்ரீமச்சப்தத்திலே சொல்லுகிற பத்நீஸம்பந்தத்தில் வரும் கலக்கங்களுக்கு
திங்மாத்ரம் பரிஹாரம் காட்டுகிறோம்" என்று தொடங்கித் தம்முடைய கலக்கங்
களையே விளங்கக் காட்டியிருக்குமழகு காணீர்—"சிலர் த்வயத்தில் பூர்வகண்டத்தில்
ஸ்ரீமச் சப்தம் உபலக்ஷணபரமென்றும், உத்தரகண்டத்தில் ஸ்ரீமச்சப்தம் விஶேஷண
பரமென்றும் பிரியச் சொன்னார்கள்; இவ்விடத்தில் ஶப்தம் ஏகரூபமாயிருக்க ஸ்வாரஸ்
யத்துக்கு பாதகமுமன்றிக்கேயிருக்க......கூடஸ்த ஸம்ப்ரதாய விருத்தமாகப்பண்ணு
கிற இந்த விபாகம் அநுபபந்நம்" என்று தடபுடலாக எழுதி வைத்துள்ளார். இப்படி
அஸாதுவாக எழுதினவிடங்கள் பலவிருந்தாலும் இரண்டுமூன்றிடங்களைக் காட்டி
விவரிப்போம். அந்நூலுக்குப் பல வியாக்கியானங்கள் தோன்றியிருந்தாலும் ஶாஸ்த்
ரஜ்ஞர் எழுதிய வியாக்கியானம் ஒன்றேயுள்ளது; அதாவது, ஸ்ரீமத்பரமஹம்ஸ. இஞ்சி
மேட்டழகிய சிங்கருடைய ஸ்ரீஸாரபோதிநியென்னுமது. இதில் இவ்விடத்தில் அந்த
ஸ்வாமி என்ன எழுதியிருக்கிறாரென்னில்; (இரண்டாம் பாகத்தில் பக்கம் 29ல் ஏழா
வது வரி தொடங்கிக் காணுங்கள்; ஊன்றிக்காணவேண்டா; மேலெழுந்தவாரியாகவே
காணுங்கள். அந்த ஸ்வாமியின் பங்க்திகள் இவை;—"இந்த விஶேஷணத்வ உப

லக்ஷணத்வங்கள் ஜந்மாத்யதிகரண ஸ்ரீபாஷ்யத்தில் சொல்லப்பட்டதுகள்; இந்த உபலக்ஷணத்வத்தை ப்ரக்ருதத்தில் பிராட்டி விஷயத்தில் ஏகதேசிகளும் சொல்லுகிறார்களில்லை; சொல்லவும் முடியாது'' என்றார். மேல் வாக்கியங்களைப் பிறகு எடுத்துக் கொள்வோம்; எடுத்துக்காட்டினவரையில் என்னதேறிற்று? என்றால், ஸ்ரீபாஷ்ய ஶிக்ஷிதங்களான விஶேஷணத்வ உபலக்ஷணத்வங்களை உள்ளபடிதெரிந்துகொள்ளவில்லையென்பதும், ''ஏகதேசிகளும் சொல்லுகிறார்களில்லை'' என்பதனால் ஆரோப்ய தூஷணம் செய்பவர் என்பதும், ''சொல்லவும் முடியாது'' என்பதனால் அஸ்தாநே ப்ரமம் கொண்டவர் என்பதும் திண்ணமாகக் காட்டப்பட்டதாயிற்று.

வியாக்கியானம் பண்ண விழிந்தவர் மூலத்திற்குக் கொத்தை சொல்லக்கூடாதாகையாலே விவக்ஷிதாநுகுண வாக்யலேகந ஸாமர்த்த்யவிரஹத்தைத் தெரிந்துகொண்டு மூலகாரருடைய அபிப்ராயத்தை ஒருவண்ணம் விவரித்துள்ளார்; எவ்வண்ணமென்னில்; ஶரணவரணபரமானது பூர்வகண்டம்; கைங்கர்யப்ரார்த்தநாபரமானது உத்தரகண்டம். உபாயதயா ஶரணவரணத்தில்மட்டும் பிராட்டிக்கு அந்வயமில்லை யென்றும், கைங்கர்ய ப்ரார்த்தனையில்மட்டும் பிராட்டிக்கும் அந்வய முண்டென்றும் சொல்லுகிறவர்கள் இங்கே கண்டிக்கப்படுகிறார்கள் என்பதாக. மூலகாரர்க்கு இதுதான் அபிப்ரேதமென்பதை நன்கு இசைகிறோம். இந்த கண்டனம் யாருக்குத் தெரியுமோ? ஸ்ரீபராஶரபட்டார்யருக்கென்பதில் ஸந்தேஹமில்லை. அவ்வாசிரியரே அஷ்டச்லோகியில் த்வயார்த்த விவரணமான *நேத்ருத்வம்* *ஈஶாநாம்* என்கிற இரண்டு சுலோகங்களிலும் இங்ஙனே விபாகத்தை ஸுஸ்பஷ்டமாகக் காட்டியுள்ளார். *நேத்ருத்வ*மென்கிற முந்தின சுலோகத்தில் *அத மிதுநபரம் ப்ராப்யம்* என்றும், *ஈஶாநாம்* என்கிற அடுத்த சுலோகத்தில் *ச்ரியம் ஸம்ச்ரித்ய* என்று புருஷகாரப்ரபத்தியைத் தனியே சொல்லிமுடித்து, *அகிலகுணஸ்ய ஹரே: அங்க்ரீ இஷ்டோபாயதயா ஆச்ரயே* என்று உபாயத்வேநவரணம் எம்பெருமானுக்கே என்பதையும் விளங்கக்காட்டி, அதற்குமேல் *ச்ரியா ச ஸஹிதாய ஆத்மேச்வராய தாஸ்யமஶேஷம் கர்த்தும் அர்த்தயே* என்று கைங்கர்யப்ரதிஸம்பந்தி ஒருமிதுனமேயென்று விளக்கியுள்ளார். யார்? அதிகரண ஸாராவளியில் *வ்ருத்திக்ரந்தே து* என்கிற சுலோகத்தில் மஹர்ஷிகல்பராகப் போற்றப்பட்ட பட்டர். திருக்குருகைப்பிரான்பிள்ளான் ஒரு அநுஷ்டுப்பினால் சுருக்கமாக மறுக்கப்பட்டார்; பட்டர் விரிவாக மறுக்கப்பட்டார் என்பதுவாசி. அல்பப்ரஜ்ஞருமறிய மீண்டும் விளக்குகிறேன். அஷ்டச்லோகியை தேசிகன் அஸக்ருத் உதாஹரித்திருக்கையாலே அது பட்டர் ஸாதித்ததன்று என்றோ, அதை தேசிகன் ஸேவிக்கவில்லையென்றோ சொல்ல முடியாது. அவர் (பட்டர்) த்வய பூர்வகண்டத்தின் பொருளை விவரிக்குமிடத்து ''ச்ரியம் ஸம்ச்ரித்ய'' என்று புருஷகார ப்ரபத்தியைத் தனிப்படவும், ''ஹரே: அங்க்ரீ இஷ்டோபாயதயா ஆச்ரயே'' என்று உபாயபூத பகவத்ப்ரபத்தியைத் தனிப்படவும், *ச்ரியா ச ஸஹிதாய......அர்த்தயே* என்று கைங்கர்ய ப்ரார்த்தனையை மிதுந விஷயமாகவும் நிஸ்ஸந்தேஹமாக அருளிச்செய்திருக்கிறார். இவ்வர்த்தம் தேசிகனுக்கு அஸஹ்யம் என்பது *விஜ்ஞாதமவிஜாநதாம் நூலினால் விளங்கி யிருக்கின்றது.

இனி மற்றொரு விஷயம் ''எம்பெருமானும் பிராட்டியுங்கூடி உபாய மென்ன வேண்டில் ஸ்ரீமந் நாராயண சரணௌ என்று பஹுவசநாந்தமாகமந்த்ர ஶரீரம் இருந்

திருக்கவேணும்'' என்று யாரோ வொருவர் சொல்லியிருப்பதாக அஸ்தாநே மருண்டு த்வயாதிகாரத்தில்—*சரணு நிதி வக்தவ்யம் இதியச்ச ப்ரஸஞ்ஜிதம், க்ரந்தஜ்ஞைரபஹாஸ்யம் தத் பதிப்ராநாந்யநோந்வயாத்* என்று காரிகை யிட்டுவிட்டார். அந்தோ! அநர்த்தஹேதுவான இந்த வ்யுத்பத்திக்கு எவ்வளவுதான் ஶோகிக்கலாம். ''ஸ்ரீ நாராயண'' என்றிருந்தால் சரணு் என்று ப்ரயோகிக்கலாம்: ஸ்ரீமந்நாராயண என்று இருப்பதால் சரணு் என்னக்கூடாது; இந்த ஆபாதநம் அபஹாஸ்யம்'' என்று வியாக்கியானம் பண்ணிவிட்டார்கள்; ''ஸாமாத்யோ ராஜா ஆஹ'' என்னலாமேயொழிய (ஆஹது:) என்னக்கூடாது என்றும், *குரோஸ் ஸதாரஸ்ய நிபீட்ய பாதௌ* என்றிருக்கிறதேயொழிய (பாதாந்) என்றில்லை என்றும் விவரித்துள்ளார்கள். இதெல்லாம் அநியாயமான மருள். (குரோஸ்) ஸதாரஸ்ய நிபீட்ய பாதௌ — பாதாந் — என்கிற இரண்டு ப்ரயோகமும் நிரவத்யம். (ஸாமாத்யோ ராஜா ஆஹ) என்பது விருபத்ருஷ்டாந்தம். ஆளவந்தார் *ப்ரஹ்மேஶாதி ஸுரவ்ரஜ: ஸதயித: த்வத்தாஸதாஸீகண:* என்றருளியிருப்பது ப்ரஸித்தம். ஸுரவ்ரஜ: த்வத்தாஸகண: என்னலாமே யொழிய (த்வத்தாஸ தாஸீகண:) என்னக்கூடாது. (ஸதயித:) என்று ஸுரவ்ரஜம் விஶேஷிக்கப்பட்டிருத்தலால் பொருந்தாமை யில்லை. ஸாது ப்ரயோகமேயாயிற்று. இதேபோல (நாராயண: சரணசதுஷ்டயவாந் என்ருல் தவறு; ஸ்ரீ விசிஷ்ட: நாராயண; சரண சதுஷ்டயவாந்) என்று மேளதாளத்தோடு சொல்லலாம். இங்கு அர்த்தவிசாரமில்லை, கேவலம் ஶப்தவிசாரமே. ஸ்ரீமந்நாராயண சரணௌ் என்பது அபப்ரயோகமென்று ப்ரமித்து தூஷித்தது அபஹாஸ்யதமம்.

இந்த விநோதத்தையும் கேளுங்கள், காணுங்கள்; ஸ்தோத்ர ரத்நத்தில் *வபுராதிஷு என்கிற ச்லோகத்தில் *அஹமத்யைவ மயா ஸமர்ப்பித:* என்று ஆத்மஸமர்ப்பணம் பண்ணினதாக அருளிச்செய்து, உடனே *மம நாத! யதஸ்தி* என்கிற ச்லோகத்திறல் முன்பண்ணின ஸமர்ப்பணத்தில் அநுஶயம் காட்டினதான நிர்வாஹத்தை ஸ்வாமி ஸ்தோத்ரபாஷ்யத்தில் மறுத்தருளினுர். அவ்விடத்துப் பங்க்திகள்— ''அத்ர பூர்வக்ருதஸமர்ப்பணுநுஶயேந ததேவ ப்ரதிக்ஷிப்யத இதி பக்ஷஸ் து அப்ரயுக்தாநாம் ஆத்மஸமர்ப்பணமபிப்ரேத்யோக்தி:...என்று தொடங்கிப் பலவுமெழுதி இங்கு அநுஶயமில்லை யென்று முடித்திட்டார். தாமே ரஹஸ்யத்ரயஸாரத்தில் ஸாங்கப்ரபதநாதிகாரத்தில் ''இஸ்ஸமர்ப்பணத்தைப்பற்ற அநுஶயம் பண்ணிற்றும்'' என்று அநுஶயத்தை அங்கீகரித்து வாக்யவிந்யாஸம் செய்தருளியுள்ளார். இங்ஙனே நேர்ந்துள்ள பரஸ்பர வ்யாஹதிகளைக் காணும்போது ப்ரக்ஷேப உத்க்ஷேபங்களே ஶங்கிக்கப்படுகின்றன. இப்போது இவ்வளவில் நிறுத்துகிருேம்.



# முடிவாக ஒன்று விஜ்ஞாபித்து நிகமிக்கிறேன்.



எந்த நூலுக்கும் மறுப்பென்று ஒன்று தோன்றுமலிராது. நாமெழுதியதே நிராக்ஷேபமான ஸித்தாந்தமென்கிற எண்ணத்தோடே இந்த நூலை எழுதினேனல்லேன். அவசியம் இதற்குக் கண்டன நூல் வெளிவரவேணுமென்கிற மனோரதத்துடனேதான் இந்நூலை வெளியிட்டிருக்கிறேன். இதில் இடையிடையில் சிலவாக்யங்களுக்கு மறுப்பெழுதியிருப்பதுபோல் தோன்றக்கூடும். உண்மையாகவே அப்படியிருந்தாலும் பெரியோர்கள் திருவுள்ளம் கலங்காமல் "இந்த ஜிஜ்ஞாஸுவைத் தெளிவிக்கவேணும்" என்றேகொண்டு சிஷ்யஸந்தேஹங்களை ஆசார்யர் போக்குங்கணக்கிலே பரமஸாத்விகர்களான ப்ராஜ்ஞர்கள் ஸௌம்யமான நடையிலெழுதி அடியேனைத் தெளிவிக்கவேணுமென்று ப்ரார்த்தித்து நிற்கிறேன்.

ச்லோ. வரவரமுநிவர்யஸித்தாந்தஸாராபிதா நாம் க்ருதிம்
வரவரமுநிவர்யபாதாரவிந்தைகஸக்தாஶய:,
வரவரமுநிவர்யஸித்தாந்ததத்வஜ்ஞஸந்துஷ்டயே
நிரவதிகுணப்ருந்தஸாந்த்ராமிமாம் ஸாது ஸந்தத்தவாந்.

தேசிகபக்தாஸ் ஸந்தோ தேசிகஸத்ஸம்ப்ரதாயஸாரார்த்தாந்,
விலிகந்தி நைவ கஸ்மாத்? விஹாய பீதிம் லிகந்து விலிகந்து.

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் எழுதிய
ஸ்ரீமத் வரவரமுநிவர்ய ஸித்தாந்தஸாரம்
முற்றுப்பெற்றது.
ஸ்ரீரஸ்து.

